உலகம் இயங்க விஸ்வகர்மா குலம் வளரட்டும்

# தஞ்சை பெரியகோவில் பெருவிழா

# விஸ்வகர்மா திருவிழா



# ஆயிரம் ஆண்டு பூர்த்தி விழா மலர்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## என்றும் இன்பம் தழைக்க இறைவழிபாடு

# பஞ்ச புராணம்

1. இடரினும் தளரினும் எனதுஉறு நோய்
தொடரினும் உனகழல் தொழுது எழுவேன்
கடல்தனில் அமுதொடு கலந்த நஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே
இதுவோஎமை ஆளுமாறு ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ எனது இன்னருள் ஆவடுதுறை அரனே.
– தேவாரம்.

2. கல்லாத புல்லறிவில் கடைப்பட்ட நாயேனை
வல்லாள னாய்வந்து வனப்பெய்தி இருக்கும் வண்ணம்
பல்லோரும் காணஎன்தன் பசுபாசம் அறுத்தானை
எல்லோரும் இறைஞ்சு தில்லை அம்பலத்தே கண்டேனே
– திருவாசகம்.

3. கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணை மாகடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மணமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்றஎம் சிவனைத்
திருவீழி மிழலை வீற்றிருந்த
கொற்றவன் தன்னைக் கண்டு கண்டு உள்ளம்
குளிர என்கண் குளிர்ந்தனவே
– திருவிசைப்பா.

4. நிட்டைஇலா உடல்நீத்து என்னை ஆண்ட
நிகர்இலா வண்ணங்களும்
சிட்டன் சிவனடியாரைச் சீராட்டும்
திறங்களுமே சிந்தித்து
அட்டமூர்த்திக்கு என்அகம் நெக ஊறும்
அமிர்தினுக்கு ஆல நீழல்
பட்டனுக்கு என்னைத் தன்பால் படுத்தானுக்கே
பல்லாண்டு கூறுதுமே.
– திருப்பல்லாண்டு.

5. கற்பகம் ஈன்ற செவ்விக் காமரு பவளச் சோதிப்
பொன்திரள் வயிரப் பத்திப் பூந்துணர் மலர்ந்த போலும்
நற்பதம் பொலிவு காட்ட ஞாலமும் விசும்பும் எல்லாம்
அற்புதம் எய்தத் தோன்றி அழிகினுக்கு அணியாய் நின்றாள்.
– பெரியபுராணம்.

ப்ரஹ்ம வம்ச ப்ராஹ்மணீய
போதாயன ஸூத்திர விதி:

## முன்னுரை :

ஓம் விராட் விஸ்வகர்ம பரப்ரஹ்மணே நமஹ !

என் நெஞ்சில் நீங்கா இடம் பெற்ற தங்கதரணியாம் தஞ்சையில் வாழும் விஸ்வகர்ம பஞ்சப்ரஹ்ம வம்சத்தில் உதித்த ப்ராஹ்மணீயர்களுக்கு என்னுடைய முதல் நமஸ்காரங்கள். சூரிய வம்சத்தில் உதித்து க்ஷத்ரிய வர்ண நெறிமுறையோடு தென்னாடு ஆண்ட கலையுலக ராஜாதிராஜன் இராஜாராஜசோழ மாமன்னர் அவருடைய இறைப்பணியை ஆயக்கலைகள் 64லும் பேர் போற்றும் வண்ணம் உலகிற்கே உயர்த்தி காட்டினார்.

கங்கை வென்று கடாரம் வென்ற இச்சோழ மன்னர் அழியாத புகழை அடைய எண்ணி இந்திரலோகமும் பொறாமை கொள்ளும் அழகுடைய மாடமாளிகைகளையும், கூட கோபுரங்களையும் நியமிக்க எண்ணம் செய்து, சிருஷ்டியில் வல்லவர்களாகிய ப்ரஹ்ம வம்சத்தவர்களின் வேத, உபவேத, வேதாங்க, ஆகம, மதிநுட்ப நுன்னறிவினை வியந்து தானும் உலக சாதனையை செய்ய விரும்பி இப்பிராமண பிரிவினரின் அறிவு கூர்மை உலகத்தார் அனைவரும் வியக்கும் வண்ணம் ஒரு வாய்ப்பினை இவர்களுக்கு கொடுத்ததின் விளைவாக உருவானது தான் தஞ்சை பெரியகோயில் ஆகும். இப்பெரிய கோயிலில் உள்ள சிவபெருமானுக்கு, அக்ஷமோக்ஷணம், ப்ராணா பிரதிஷ்டை, அஷ்டபந்தனம் முதலிய முக்கிய மூன்று வைதீகத்தை சோழ மன்னனின் முன்னிலையில் வேதரீதியாக செய்தவர்கள் விஸ்வகர்ம பிராமணர்களாகிய மூவர்கள் ஆவார்கள்.

மேலும் இப்பிரம்ம வம்சத்தினர்கள் வேதங்களை ரிஷிகள் கல்பங்களாக தொகுத்த போது முதல் தோன்றிய பௌதாய ஸூத்திரத்தில் இப்பிராமண வர்ண மூல ருஷிகளாக உள்ள ஸனகாதிருஷிகளை யஜுர்வேதத்திலும் அவர்களின் மந்திர பிரயோகங்களை குண்டவிதானங்களில் இஷ்டகையை குறித்து நடத்தப்படும் ஹவியின் விதிகளையும் மேலும் "ஸ்ரீ விஸ்வகர்மா" வை குறித்து தேவபிராமணர்கள் நடத்தும் **"வைஸ்வகர்மண மஹா ஹோம"** விதிகளை தெளிவுபட ஆதாரத்துடன் க்ரந்தம் மூலம் கூறிப்பிட்டுள்ளேன். இந்த விதி ப்ரஹ்ம வம்ச பிராமணர்களுக்கு ஓர் உயர்ந்த அந்தஸ்தினை அளிக்கும் என எண்ணி இந்நூலை எனது தாய், தந்தை, குரு மற்றும் முன்னோர்கள், கடவுள் அருளுடன் இதனை சமர்பிக்கிறேன்.

இப்படிக்கு,
ஆதிப்ரஹ்ம குலோத்பவ; சத்யோஜாத பிரவரான்வித
ஸாநக ருஷி கோத்ர, ரிக் வேத சாகீனாம் ஆச்வலாயந ஸூத்ர
ப்ரஹ்ம ஸ்ரீ **T.M.S. சுரேஷ்சர்மா, M.B.A.,**
அஹம்போ அபிவாதயே !

# தஞ்சைப் பெரிய கோயிலின்

**ஸ்ரீ கார்ய பணியில் விஸ்வகர்ம பிராமணர்களின் பெருமைகள் :**

1. சிவலிங்க பிரதிஷ்டை
2. கருரார் - தேவசிற்பி
3. பொன்மணி - சித்தர்
4. ஸ்தபதிகள்
5. முடிவுரை

**தஞ்சைப் பெரிய கோயில் இலிங்கப் பிரதிஷ்டை :**

புகழ் பெற்ற தஞ்சைப் பெரிய கோயில் கோயிற் பணி முடிந்து அருள் திருமேனியாகிய சிவலிங்கத்தை கோயிலில் எழுந்தருளச் செய்து, ஆதிசைவரைக் கொண்டு மருந்து சாத்தி பந்தனம் செய்வித்த போது ஆவுடையார் திருவுருவம் பெரியதாக இருந்தமையால் மருந்து இளகி பந்தனமாகாமற் போயிற்று. அது கண்டு இராஜராஜன் மனம் வருந்தி நின்றபோது, "கரூர்த் தேவர் வரின் உனது எண்ணம் கை கூடும்". என எதிர் பாராது நன் மொழி ஒன்று எழுந்ததாம். அரசனும் அப்பெரியார் யார்? அவர் வருகை எனக்கு எவ்வாறு கை கூடும்? என அங்கு குழுமியிருந்தோரிடம் அவன் உசாவியபோது, தனது உருமாறி அவ்விடத்திருந்த போகநாதர், அரசே கவலை வேண்டாம் கரூர்த் தேவரை இங்கு வரவழைப்போம் எனக்கூறி தமது தவவலிமையால் கரூர்த்தேவரை அழைத்தாராம். தஞ்சையை அடைந்த கரூர்த்தேவர் போகரை வணங்கி அவரது ஆணைப்படி கோயிலினுட்புகுந்து, ஆவுடையாருடன் இலிங்கத்தைச் சேர்த்துச் செவ்வனே நிறுத்தித் தம் வாயிற்றம் பலத்தை மருந்தாக உபயோகித்து இறுகப் பிடித்திட பொன்னை உருக்கி வார்த்தாற் போல் பந்தனம் ஆயிற்று. அப்போது அரசனும் பிறரும் அன்பர்தம் செயலை யாரே அறிகுவர் என மகிழ்ந்து வியந்தனர்.

**கரூர்த் தேவர் (தேவசிற்பி) :**

இராஜராஜன் காலத்தில் அவனுக்கு வந்து உதவியவர் சித்தர் எனப்படுதல் வேண்டும். சித்தர் நூல்கள் இவர் பொற்கொல்லர் மரபினர் என்றும் போகருடன் பதினெண் சித்தர்களில் இவரும் ஒருவர் என்றும், இவருடைய பெருமைகளை விரிவாகக் கூறக் கூடிய நூல்களும் உண்டு. ஆதலின், இப்பெரியாருக்கு இக்கோயிலில் தனியிடம் உண்டான தொடர்பு உணரற்பாலது. கோயில் கட்டுவது தச்சர் என்ற பெயரில் சிற்பியரின் செயலாகும். இவர்களே தெய்வத் திருமேனியும் செய்பவராவர். அவற்றை ஸ்தாபிதம் செய்ய ஸ்தபதியரும் இருக்க, ஆதி சைவரை அரசன் அழைத்ததேன்? இத்தொழில் நுட்பமறிந்திராதவர்களை அழைத்தினால், பொற்கொல்லர் மரபினரான கரூர்த்தேவர் உமிழ்ந்த எச்சிற்றம்பலம் மருந்தாகப் பயன்பட்டது.



**இராஜராஜனின் சமய நோக்கம் :**

இவன் அளவு கடந்த சைவப்பற்றும், பரந்தசமய நோக்கும் கொண்டவன். இவனால் எழுப்பப்பட்ட பெரிய கோவில் விமானங்களிலும், சைவ, வைணவ சம்பந்தமான சிற்பங்கள், சிலைகள் ஆகியவற்றின் மூலம் அறிகின்றோம். கோயிலின் நாற்புறமும் உயர்ந்த மதிலின் மீதிருந்து விழுந்து, பிறர் எடுத்துச் சென்றது போக எஞ்சி நிற்கும் 343 நந்தி உருவங்களும் இதனையே வலியுறுத்துகின்றன.

சமயப்பற்றுடன் உணர்வும் கலந்த கலா ரசிகன் இராஜராஜன், தில்லைத் தாண்டவ மூர்த்தியின் ஒப்பற்ற பக்தன் இறைவனின் ஏழுவகை ஆடலில் ஈடுபட்டவன். ஆகவே இறைவனின் தாண்டவ கரணங்கள் 108 ஐயும், இக்கோயிலின் மேல்தளத்தின் உட்பக்கத்து அடி வரிசையில் சிற்பமாக வடிக்க ஏற்பாடு செய்தான், வேலையும் நடந்தது. எக்காரணம் பற்றியோ 81 சிற்பங்களைச் செய்து முடித்து 82 ஆவது துவங்கி முடிவு பெறவில்லை. தற்போது காணப்படுவது 81 இறைவன் திருவுருவங்களே நான்கு கைகளுடன் மானாடவும் மழுவாடவும் ஆடும் தாண்டவம், கலா இரசிகரும், கண்பெற்றோரும் கண் பெற்ற பயனுடையோரும் காணத் தக்கவைகளாக உள்ளன.

**தஞ்சைப் பெரிய கோயில் சிறப்பு :**

நிலப்பரப்பிற்கு மேலே உயர்ந்த மேடையில் நிறுவப்பட்டுள்ளதால் மாடக்கோயில் என்பதாயிற்று. கர்பக் கிரகத்திற்கு மேலே உள்ள விமானம் சதுரவடிவமானதும் பதிமூன்று கோபுர மாடிகளைக் கொண்டதுமான இதன் உச்சியில் சதுர வடிவமுள்ள பிரமந்திரக் கல்லின் மேல் கலசமும், அதன் மேல் அழகிய ஸ்தூபியும் அமைக்கப்பட்டுள்ளன. இந்த விமானம் "தச்சினமேரு" என்றும் உத்தம விமானம் என்றும் பெயர் பெறுகின்றது. இதன் உயரம் 216 அடி உடையது. பொன் தகடு போர்த்தப்பட்ட இதன் கலசம் செம்பாலானது, 3083 பலம் நிறைகொண்டது, கலசத்தின் மேல் போர்த்தியுள்ள பொன் 2926 களஞ்சு நிறையுடையது. உச்சியில் போடப்பட்ட கல் பிரமந்திர தளம் 25112 அடி சதுரமும் 80 டன் எடையுமுடையது.

தஞ்சையிலிருந்து நான்கு கல் தொலைவில் சாரப்பள்ளம்

என்ற ஊரிலிருந்து சாரம் கட்டி 80 டன் எடை கொண்ட கல்லை மேலே ஏற்றினராம்.

இப்பிரமந்திரக் கல்லைப்பற்றிக் கதை ஒன்றுண்டு. விமான வேலை நடந்து கொண்டிருந்த போது சிற்பியருக்கு மோரும் நீரும் அவ்வப்போது கொடுத்துக் கொண்டிருந்தாள் ஒரு மூதாட்டி, அவ்விதம் உதவியவளிடம் ஒரு கல் இருந்தது. தங்களின் நன்றியைக் காட்டும் அறிகுறியாக சிற்பியரும் அக்கிழவியின் விருப்பப்படி அவள் கொண்டு வந்து கொடுத்த கல்லை விமானத்தின் நடுவில் அமைத்துக் கோயில் கட்டி முடித்தனர். இதையறிந்த சோழ அரசன், சிற்பிகள் மீது கடுஞ்சினம் கொண்டான். "கிழவியளித்த நிழலில் யாம் வதிகின்றோம்" என்று சோழன் கனவில் இறைவன் திருவாய் மலர்தருள சினம் நீங்கி, அமைதியடைந்தான் என்பதாக ஒரு வரலாறு உண்டு.

## பொன்மணி சித்தர் :

"அம்மையார் நிழலில் யாமமர்ந்தோம் என்று அருள் செய்த செம்மையார் வீற்றிருந்த தஞ்சை" பிரகதீஷ்வர மகாத்மியம், "நிதியுடைக்கோன் முன்னோர் நரைமுதியா நிழல் வதிகின்றோம் என வந்தான்" என தஞ்சை பெருவுடையார் உலா ஆசிரியர், கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் கூறியுள்ளனர். காணும் இவற்றால் கிழவி கொடுத்த கல் கோபுரத்தில் உள்ளது உறுதியாகின்றது. தஞ்சையில் வாழ்ந்த பொன்மணித்தட்டார். விசுவகர்மபக்த உபாக்யானம், என்ற பெயரில் ஒரு நூல். அதில் பொன்மணித் தட்டார் வரலாறு என்பதாக ஒரு பகுதி – பெரியகோயில் எடுப்பித்த இராஜராஜன் கனவில் பெருவுடையார், "யாம்; நீர்கட்டிய மறைவிலும், இடைச்சி நிழலிலும், பொன்மணித்தட்டார் இதயத்திலும் வசிக்கின்றோம்" என்று சொல்லியருள அரசன் பொருளறியாது தயங்கி தஞ்சையில் வசித்துவந்த பொன்மணித் தட்டாரை அழைத்து வினவ, அவரும் தனது இதயத்தில் இறைவன் வதிவதை ஒப்புக் கொண்டாராம். மற்றும் இறைவன் கட்டளைக்காகக் காத்திருந்தேன், அவன் திருவுளப்படி கோயிலின் வடபாகத்தில், ஸ்தூபிக்கு நேரே குளம்வெட்டுமாறும் அதனிடையில் சமாதி கட்டுமாறும் அரசனிடம் வேண்டிக்கொண்டாராம் தட்டார்.

அரசனும் அவற்றைச் செய்து முடித்தவுடன், தட்டார் குளத்தில் மூழ்கி சமாதியில் அமர்ந்தவுடன் தட்டாரின் இதயத்தினின்றும் வெளிப்பட்டெழுந்த ஜோதியின் மூலம் இறைவனைக் காட்டி பெருவுடையார் திருமேனியாகிய லிங்கத்தில் கலந்து விட்டது. இவற்றை அருகிருந்து கண்ட அரசனும் அச்சமாதிக்கு நித்தியபூசை செய்ய ஏற்பாடு செய்தான். என்பதாக விசுவகர்ம பக்த உபாக்யானம் சொல்லும், இவற்றைக் அறியும் போது மனம் பெருமிதமடைகின்றது.



## தஞ்சைப் பெரிய கோயிலைக் கட்டிய தச்சர்கள் : (ஸ்தபதிகள்)

தஞ்சை இராஜ ராஜேசுவரமுடையார் கோயிலில் இராஜராஜ சோழனின் கல்வெட்டுகள் பல உள்ளன.

இக்கோயிலின் செப்புத் திருமேனிகளைப் பற்றியும் கோயிலில் பணியாற்றியவர்களைப் பற்றிய குறிப்புகளும் அங்குள்ள கல் வெட்டுகளில் உள்ளன. 750க்கும் மேற்பட்ட பணியாட்களை பற்றி இக்கல்வெட்டுகள் குறிக்கின்றன. மேலும் இக்கோயிலைக் கட்டிய சிற்பிகளின் பெயரும் காணக் கிடைக்கின்றன. அவை தச்சாச்சார்யன், சோழன் குஞ்சரமல்லன், இராஜராஜப் பெருந்தச்சன், நித்திய வினோதப் பெருந்தச்சன், கண்டராதித்த பெருந்தச்சன் என்றும் இவர்களுக்கும் இவர்களுக்கு கீழ் வேலை செய்தோருக்கும் கொடுத்த நிலப் பங்குகளை பற்றி குறிக்கின்றன. மற்றும் இக்கல்வெட்டைப் பொறித்த ஆசாரியனைத் தச்சன் என்றே குறிக்கப்படுகின்றான்.

## முடிவுரை :

தஞ்சைப் பெரியகோயிலின் படைப்பிற்கு விஸ்வகர்ம பிராமணர்கள் குலத்தில் பிறந்த இராஜராஜ பெருந்தச்சாசாரியர், பொன்மணி தட்டாராச்சாரியர், தேவசிற்பி கரூரார் சித்தர் ஆகிய மூன்று பேரும் சேர்ந்து உயிர் கொடுத்து, பிரதிஷ்டை செய்து, படைத்து தந்த விளக்கங்கள் வரலாறுகளில் தெளிவுபட ஆதாரத்துடன் காண்பிக்கப்பட்டுள்ளது.

மேலும் இக்கோயிலின் அமைப்பானது சிற்ப சாஸ்திரத்தில் ஒன்றான மயசாஸ்திரத்தினை பின் பற்றியவாறு உள்ளது. ஏனெனில்

ஈசாசசிநந்தி கேச்வரஸ்ரபதயோவை மஹாகால ! சாமுண்டாப்யத நிர்ருதிச்சாகஸ்தியோ விஸ்வகர்மா என்று ஆவரண தேவதைகளின் ஸ்தான விதிப்படி பெரியகோயிலின் முதல் ராஜகோபுரத்தின் வடக்கு பகுதியில் சாஸ்திரத்தில் சொல்லப்பட்டுள்ளது போல் ஈசான விளங்கும் இடத்தில் "ஸ்ரீ விஸ்வகர்மா" வின் திருவுருவம் 10 கைகளுடன், 5 முகங்களுடன் உபவேதத்தில் சொல்லியபடி சிருஷ்டிக்கப் பட்டுள்ளது. ஆகவே விஸ்வகர்ம பிராமணர்களின் கீர்த்தியை பெருமைபடுத்தி இராஜராஜசோழன் பல தான தர்மங்களை அளித்துள்ளார். இப்படிப்பட்ட கலையறிவுக்கு சொந்தக் காரர்களாகிய நம் முன்னோர்களின் பெருமையை போற்றி பாதுகாப்பது இன்றுள்ள விஸ்வகர்ம பிராமணர்களின் கடமையாகும்.

# கருவூரார்

**பிறப்பு :**

போகரின் மாணாக்கராகிய கருவூர்ச் சித்தர், செம்பு, பித்தளை, உலோகங்களைக் கொண்டு தொழில் செய்யும் கண்ணார வகுப்பைச் சேர்ந்தவரென்றும் தேவதச்சன் விஸ்வகர்மாவின் மகனான மயன் குலத்தில் பிறந்தவர் என்றும் கூறியுள்ளார்.

சீரான கருவூரார் பிறந்த நேர்மை
செப்புகிறேன் செம்பவளவர்யா கேளீர்
கூறான சித்திரையாம் மாதமப்பா
குறிப்பான அஸ்தமது ரெண்டாம் காலாம்
தேரான நாள்தனிலே பிறந்த சித்து
தேற்றமுடன் கருவூரார் என்னலாமே
ஆமேதான் தேவதச்சன் என்று சொல்லி
அப்பனே அவன் மைந்தன் மயனென்பார்கள்
நாமேதான் சொன்னபடி மயனுக்கல்லோ
நாடான கருவூரார் பிறந்தாரல்லோ
போமேதான் பொன்னுலக தேவதச்சர்
பொங்கமுடன் கருவூரார்க் கீடுமல்லோ
ஆமேதான் பாண்டியற்கு உருவு செய்து
அப்பனேதான் கொடுத்த சித்துமாமே
தானான கருவூரார் ஜாதி பேதம்
தாக்கான பஞ்சணத்தின் குலத்தில் ஒன்று
கோனான கன்னார ஜாதியாகும்
கொற்றவனே நூல் தனிலே கண்டவாறே.

**கருவூர்ச் சித்தர் பெற்றோர் :**

கருவூராரின் தாய் தந்தையர் ஊர் ஊராகச் சென்று ஆங்காங்குள்ள கோயில்களில் பஞ்சலோகச் சிலைகளைச் செப்பனிட்டுக் கொடுத்தும், புதிய சிலைகளை உண்டாக்கிக் கொடுத்தும் தொழில் செய்து பிழைத்து வந்தார்கள்.

அதில் கிடைத்த வருவாய் கொண்டு அவர்கள் முனிவர்களுக்கும் சித்தர்களுக்கும் வேண்டிய பொருள்களை வாங்கிக் கொடுப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

கருவூர்ச் சித்தர்பால் கொண்ட அன்பின் மேலீட்டால் முனிவர்கள் அவருக்கு ஞானப் பால் ஊட்டினர். இதனால் இளமையிலேயே ஞானம் பெறும் நற்பயனடைந்தார் கருவூரார்.

இந்த மானுட வாழ்வின் நிலையாமையை உணர்ந்தார் கருவூரார். முனிவர்களின் நற்போதனைகளால் சித்தராகவே மாறினார்.



உலகின் நாற்றிசைக்கும் சென்று அங்குள்ள சிவாலயங்களில் எல்லாம் தங்கத்தால் ஆன சிவலிங்கத்தை உண்டாக்கினார்.

அதன்பிறகு காசிக்கு சென்று விஸ்வநாதர் ஆலயத்திலும் தங்கமயமான லிங்கத்தை உருவாக்கினார்.

**அஷ்ட பந்தனமும் பிரம்ம ராக்ஷஸியும் :**

சிவாலயங்களில் சிவலிங்கத்தைத் தங்கத்தால் உருவாக்குவதும் பாசுரம் பாடி பக்தி நெறி வளர்ப்பதுமாக கருவூரார் ஊரெங்கும் சித்தர்களுடன் அலைந்து திரிந்து வந்தார்.

ஏழை எளிய மக்களின் குறை தீர கருவூரார் பாடுபட்டுக் கொண்டிருந்த காலகட்டத்தில் ஒரு நாள் ஒரு காகம் அவர் முன் வந்து நின்று ஓர் ஓலையை வைத்தது.

கருவூர்ச் சித்தரும் அந்த ஓலையை எடுத்து வாசித்தபோது, "கருவூரா ! உடனே தஞ்சைக்கு வந்துசேர்" என்று எழுதப் பட்டிருந்தது. போக முனிவர்தாம் அந்த ஓலையை எழுதியிருந்தார் என்பதையறிந்து அக்கணமே தஞ்சைக்குப் புறப்பட்டுச் சென்றார்.

கருவூராரை போக முனிவர் தஞ்சைக்கு வரவழைத்ததில் காரணமிருந்தது. தஞ்சையை ஆண்ட சோழ மன்னனுக்கு ஏற்பட்டிருந்த சங்கடத்தைப் போக்கவே அவரை வரவழைத்திருந்தார்.

அந்தச் சோழ மன்னன் தஞ்சையில் பிரம்மாண்டமான சிவாலயம் கட்டி முடித்திருந்தான். மிகவும் நுட்பம் வாய்ந்த அற்புதமான சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த அந்த ஆலயத்தில் அஷ்டபந்தன கும்பாபிஷேகம் செய்து சிவலிங்கத்தை பிரதிஷ்டை செய்ய முயன்றபோது, அஷ்டபந்தனம் செய்ய முடியாமல் கட்டு அவிழ்ந்து கொண்டே இருந்தது.

மன்னனுக்கு அதற்கான காரணம் புரியாது கண்ணீர் விட்டான். போக முனிவரும் இதனைக் கண்டு மனமிரங்கி அந்தக் குறையைப் போக்கவே கருவூர்ச் சித்தரை உடனே வரவழைத்தார்.

போக முனிவரின் அழைப்பிற்கிணங்க அங்கு அந்த கருவூரார் கோயிலுக்குள் நுழைந்து சிவலிங்கத்தின் அருகில் சென்று பார்த்தார்.

அங்கே ஒரு பிரம்மராக்ஷஸி அஷ்டபந்தனம் செய்ய விடாமல் தடுத்துக் கொண்டிருப்பதைக் கண்டு அதன் மேல் காறி உமிழ்ந்தார்.

அந்தக் கணமே கருவூராரின் வாய் எச்சத்தில் தீப் பொசுங்கி கருகியது போல பிரம்மராக்ஷஸி கருகியது. அதன் பிறகு கருவூரார் அஷ்டபந்தனம் செய்து சிவலிங்கத்தைப் பிரதிஷ்டையும் அபிஷேகமும் செய்து வைத்தார்.

தடைப்பட்டிருந்த கும்பாபிஷேகம் நல்லபடியாக நடந்து முடிந்ததில் சோழ மன்னனுக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை.

கருவூராரை பலவாறாகப் பாராட்டி கௌரவித்தான். கருவூராரின் புகழ் இதன் காரணமாக நாடெங்கும் பரவியது.

## அபிதான சிந்தாமணி கூறும் கதை :

கருவூரார் பிராமண குலத்திலுதித்து கருவூரில் ஞான நூல்களை யெல்லாம் ஆய்ந்து சைவ சமயத்தைக் கடைப்பிடித்து, சிவயோக சித்தி அடைந்து, சாதிகுலம் நீத்து சிவத்தல யாத்திரை செய்து வந்தார்.

அவ்வாறு அவர் பல தலங்களை உருவாக்கி கஜேந்திர மோக்ஷமென்னும் தலமடைந்து அவ்விடமிருந்த முன்றீசரை அழைக்க, அவர் தரிசனம் தந்தார்.

முன்றீசர் கருவூராரைப் பார்த்து "கருவூராரே ! என்ன வரம் வேண்டும் ?" என்று கேட்டார்.

கருவூர்த் தேவர் தமக்கு "கள்" வேண்டுமென்று கூறினார். உடனே முன்றீசர் காளிக்கு கட்டளையிட்டார். காளி குடம் குடமாக மதுவைக் கொண்டு வந்து தந்தாள்.

அதன்பின் தனக்கு மீன் வேண்டும் என்று கருவூரார் கேட்க, காளி கோட்டவாசிகளைக் கேட்க அவர்கள் எங்கு தேடியும் மீன் அகப்படவில்லை.

உடனே கருவூர்த் தேவர் அங்கிருந்த வன்னி மரத்தினை நிமிர்ந்து பார்த்தார். அம்மரம் மீன்மாரி வருஷித்தது.

அதன்பிறகு கருவூர்ச் சித்தர் அவ்விடத்தை விட்டுச் சென்று ஒரு விஷ்ணு ஆலயத்தை அடைந்தார். "பெருமானே வாரும்" என்று அவர் அழைக்க பெருமாள் வரவில்லை.

"பெருமானில்லாத கோயிலில் பூசையுமில்லாதிருக்கட்டும்" என்று சபித்தார் கருவூர்த்தேவர்.

பின்பு அங்கிருந்து நெல்வேலியப்பன் சந்நிதானத்துக்கு முன்னின்று நிவேதன காலமென்றறியாமல் 'நெல்லையப்பா' என்று மூன்று முறையழைத்தும் மறுமொழி கிடைக்கவில்லை.

"இங்கும் இறைவன் இல்லை" என்று கருவூரார் சாபமிட அங்கே எருக்கஞ்செடி முளைத்தது.

அதனால் நெல்லையப்பர் கருவூர்த் தேவரை மானூரில் சென்று சந்தித்து தரிசனம் தந்து அடிக்கொரு பொன் கொடுத்து அவரை திருநெல்வேலிக்கு அழைத்து வந்து காட்சி தந்தார். மறுகணம் ஆலயத்தினுள் முளைத்த எருக்கு மற்றும் தகாத புல் பூண்டுகள் மறைந்துபோயின.

## கருவூராரை சிறையில் தள்ள வேண்டும் :

கருவூராரின் புகழ் கண்டு ஒரு சோழ மன்னன் அவரை



வரவழைக்க முடிவு செய்தான். அந்த சோழ மன்னனும் ஒரு சிறந்த சிவபக்தன். அவனுக்கு ஒருநாள் மனக்கண்ணால் நடராஜ தரிசனம் கிடைத்தது. அதன்பின் எப்படியேனும் தான் தரிசித்தது போல ஒரு நடராஜரை பொன்னால் செய்து தீர வேண்டும் என்று சிற்பிகளை வரவழைத்து ஒரு துலம் பொன்னை நிறுத்துக் கொடுத்தான்.

ஆனால் சோழ மன்னன் எண்ணியது போல அந்த வேலை அத்தனை எளிதாக நடைபெற்று விடவில்லை. பொன்வார்ப்பு நிற்காது உடைந்து கொண்டே இருந்தது.

அதனைக் கண்ட சோழ மன்னனும் சிற்பிகளும் மனம் நொந்தனர். சிற்பிகளுக்கோ சோழ மன்னன் கொடுத்த கெடு நெருங்கிக் கொண்டிருந்ததை எண்ணிப் பயங் கொண்டனர். எப்படியும் சோழ மன்னன் தங்களை கழுவில் ஏற்றி விடுவான் என அஞ்சிக் கொண்டிருந்தபோது கருவூரார் அங்கு வந்து சேர்ந்தார்.

"சிற்பிகளே ! கலக்கம் வேண்டாம். உங்கள் கலக்கம் போக்கவே நான் இங்கு வந்துள்ளேன். நீங்கள் எல்லோரும் சற்று நேரம் வெளியே இருங்கள். நான் சிலையை வார்த்துத் தருகிறேன்" என்று கருவூரார் கூறியதும் சிற்பிகள் யாவரும் வெளியே சென்றனர்.

அதன்பின் கருவூர்ச் சித்தர் தங்கத்தை உருக்கி அதில் ஒரு துளி செந்தூரத்தைப் போட்டார். அதன் பிறகு அதனை அச்சில் வார்த்தார். அச்சிலிருந்து வார்த்து எடுக்கப்பட்ட நடராஜர் சிலை காண்போர் வியக்க அற்புதமாக வந்தது.

சோழ மன்னன் அங்கு வந்து பார்த்து அதன் பளிரென்ற ஒளியிலும் வார்ப்பிலும் அதிசயித்து நின்றான். திடீரென அம்மன்னன், "நான் பத்தரை மாற்றுத் தங்கம் கொடுத்திருந்தேன். நீங்கள் அதனைத் திருடி எடுத்துக்கொண்டு செம்பால் சிலை செய்து விட்டிருக்கிறீர்கள்" என்று கோபமும் ஆத்தரமும் பொங்க கர்ஜித்தான்.

அதனைக் கண்டு பயந்து மிரண்டு போன சிற்பிகள், "ஐயோ மன்னா இந்த சிலையை நாங்கள் வார்க்கவில்லை. கருவூர்ச் சித்தர்தான் செய்தார்" என்று கருவூராரைக் காட்டிக் கொடுத்தார்கள்.

"அப்படியானால் அந்த கருவூராரைச் சிறையில் தள்ளுங்கள்" என்று ஆணையிட்டான் மன்னன்.

அவ்வாறே கருவூராரும் சிறையில் அடைக்கப்பட்டார். இச்செய்தியைக் கேள்விப்பட்ட திருமூலர் அங்கே வந்தார். அவர் சோழ மன்னனைப் பார்த்து "மன்னா ! தங்கத்தின் மீதுள்ள ஆசையின் காரணமாக நீ கருவூர்ச் சித்தரை அநியாயமாகச் சிறையில் தள்ளி விட்டாய். உனக்குத் தங்கம் தானே வேண்டும். நீ கொடுத்த எடைக்குச் சமமாக வெள்ளியைக் கொண்டு வந்து உருக்கு" என்று கூறியதும் அந்த சோழ மன்னனும் அவ்வாறே செய்தான்.

திருமூலர் அந்த வெள்ளியை உருக்கி அதில் ஒரு துளி செந்தூரம் போட அது பத்தரை மாற்றுத் தங்கம் ஆகிவிட்டது.

பின்பு திருமூலர் சோழ மன்னனைப் பார்த்து, "மன்னா ! நீ கேட்ட தங்கம் வந்துவிட்டது. எடுத்துக்கொள். இந்தச் செம்பு எந்த உலோகத்துடன் சேர்ந்தாலும் தங்கமாக மாறிவிடும். சோழ மன்னனே நீ ஆசை என்ற பெரிய மலைக்குள் வாழ்கிறாய். ஆசை போய் விட்டால் உண்மையான பரவெளியை உணர்ந்து கொள்வாயாக. அப்போது உனக்கு எல்லாப் பொருள்களும் ஒரே பொருளாகத் தோன்றும். அதுதான் முழுமுதற் பொருள்" என்று கூறினார்.

திருமூலர் கூறிய உபதேச மொழியினைக் கேட்ட சோழ மன்னன் மனம் தெளிந்து முற்றும் துறந்த யோகியாகி மாறிவிட்டான்.

## கருவூர்ச் சித்தர் எழுதிய நூல்கள் :

கருவூரார் வாதகாவியம் 700, வைத்தியம் 500, யோக ஞானம் 500, பல திரட்டு 300, குருநூல் சூத்திரம் 105, பூரண ஞானம் 100, மெய்ச் சுருக்கம் 52, சிவஞான போதம் 42, கற்பவிதி 39, மூப்பு சூத்திரம் 32, பூஜா விதி 30 போன்ற நூல்களை இயற்றியுள்ளார்.

கற்ப மூலிகைகள் பலவும் பற்றி கருவூர்ச் சித்தர் பாடியுள்ளார். வேம்பின் சிறப்பை மிக அற்புதமாக அவர் பாடியுள்ளார். கார்த்திகை திங்கள் மிருகசீரிடம் அல்லது பூச நாளில் ஆரம்பித்து வேம்பின் கொழுந்தைக் கிள்ளி தின்றவரைப் பாம்பு கடித்தாலும் விஷம் ஏறாது. ஒரு மாதம் தின்று வந்தால் குஷ்ட நோய்கள் தீரும். கொழுந்தை நிழலில் உலர்த்திப் பொடி செய்து வெருகடி (மூன்று விரல்களால் எடுக்கும் அளவு) தேனில் குழைத்துத் தின்று வந்தால் நரை திரைகள் மாறிப் போகும். குன்றாத இளமையுடன் முந்நூறு வயது வரை இருக்கலாம்.

வேப்ப மரத்தைத் துளைக்கும்படி திருகாணியைச் செலுத்தி அதில் ஒரு சிலாகையை அடித்துக் கீழே பழகிய மட்பாண்டம் வைத்துப் பால் அதில் விழும்படியாக வைத்து மூடி விட வேண்டும். நாற்பத்தெட்டு நாள் சென்றபின் மட்பாண்டத்தில் இறங்கியிருக்கும் தைலத்தை எடுத்து மூன்று களஞ்சு தைலம் மூன்று களஞ்சு தேன் சேர்த்துக் குழப்பிக் கொண்டு ஒரு மண்டலம் உட்கொண்டால் முதுமை வராது. உடம்பில் உள்ள ஆதாரங்கள் ஆறும் தெளிவாகப் புலப்படும். இதை அரை வருடம் உட்கொண்டு விட்டால் உடல் வச்சிரகாயம் ஆகிவிடும். உமிழ் நீர் வேதையுடையதாகி விடும். காயசித்தி ஏற்படும். விண்வெளி சஞ்சாரமும் சாத்தியமாகும்.

## திருவரங்கதாசியும் கருவூர்த் தேவரும் :

கருவூர்த் தேவர் ஒருமுறை திருவரங்கம் சென்றபோது



அங்கிருந்த தாசி அவரது மேனி எழில் கண்டு தன்னுடைய இல்லத்துக்கு அவரை அழைத்தார்.

கருவூர்த் தேவர் அந்தத் தாசியின் வீட்டிற்கு சென்று இரண்டு நாட்கள் தங்கியிருந்து விட்டு பின்பு பெருமாளை தரிசித்து விட்டு வந்தார்.

பெருமாள் அவருக்கு தந்த இரத்தினப் பதக்கத்தை தாசிக்கு கொடுத்து விட்டு விடை கேட்டார்.

ஆனால் அந்தத் தாசியோ அவரைப் பிரிந்திருக்க மனமில்லாது மிகவும் மனம் வருந்திக் கண்கலங்கினார்.

"கவலைப்படாதே, நீ எப்போது நினைத்தாலும் நான் வருவேன்" என்று வாக்குறுதி தந்துவிட்டு அகன்றார் கருவூர்த்தேவர்.

அதன்பின் அந்த தாசி கருவூர்த் தேவர் கொடுத்த இரத்தினப் பதக்கத்தைப் போட்டுக்கொண்டு வெளியே வந்தார்.

அப்போது அங்கே வந்த கோயில் அதிகாரிகள் அந்த தாசியையும் அவள் அணிந்திருந்த இரத்தினப் பதக்கத்தையும் பார்த்து விட்டு கையும் களவுமாகப் பிடித்தனர்.

"ஏனம்மா உனக்கு இந்த இரத்தினப் பதக்கம் எப்படி கிடைத்தது ?" என்று கேட்டனர்.

"இந்தப் பதக்கத்தை எனக்கு ஒரு வேதியர் கொடுத்தார்" என்றாள் அவள்.

"அப்பட்டமான பொய் கூறுகிறாய். இது பெருமாளுடைய ரத்தினப் பதக்கம். அதை நீ திருடிக் கொண்டு வந்துவிட்டு பொய் வேறு கூறுகிறாயா ?" என்று அந்த அரண்மனை அதிகாரிகள் அவளுக்கு திருட்டுப் பட்டம் சுமத்தி பல்வேறு கொடுமை செய்தனர்.

அப்போது தாசிக்கு கருவூர்த் தேவர் நினைவுக்கு வந்து அவரை மனதுக்குள் அழைத்தாள். அவள் நினைத்த மாத்திரத்தில் கருவூர்த் தேவர் அங்கே வந்து நின்றார்.

"இதோ வந்துவிட்டார் அந்த வேதியர். இவர்தான் எனக்கு இந்த இரத்தினப் பதக்கத்தை அளித்தவர்" என்று அந்த தாசி கருவூர்த் தேவரை அரண்மனை அதிகாரிகளுக்கு காண்பித்தாள்.

அரண்மனை அதிகாரிகள் கருவூர்த் தேவர் பக்கம் திரும்பி "உமக்கு எப்படி இரத்தினப் பதக்கம் கிடைத்தது" என்று கேட்டனர்.

"எனக்கு பெருமாள்தான் கொடுத்தார். வேண்டுமானால் பெருமாளிடம் கேட்டுக் கொள்ளுங்கள்" என்று கருவூரார் ஆகாயத்தைக் காண்பிக்க ஆகாயத்தில் பெருமாள் தரிசனம் தந்து "நாமே அந்த இரத்தினப் பதக்கத்தை கருவூர்ச் சித்தருக்கு கொடுத்தோம்" என்று கூறி மறைந்தார்.

**சிவலிங்க அடைக்கலம் :**

மகாசித்தராகிய கருவூரார் கடைசியாக தாம் பிறந்த ஊராகிய கருவூருக்கு வந்து சேர்ந்தார்.

அந்த ஊரிலிருந்த வேதியர் யாவரும் கருவூரார் மீது ஏற்கனவே வீண் பகையும் பொறாமையும் கொண்டிருந்தனர். இது நாளுக்கு நாள் அதிகமாகியது.

பொய்க் குற்றச்சாட்டுகளைத் தொடர்ந்து சுமத்தி அரசனிடம் கருவூர்ச் சித்தரைப் பற்றி புகார் செய்து வந்தனர்.

ஆனால் கருவூரார் குற்றம் இல்லாதவர் என்பதை அறிந்த மன்னன் அந்த வேதியர்களை கோபம் கொண்டு விரட்டினார். இதனால் மிகவும் மனம் உடைந்தனர் வேதியர்.

எப்படியாவது கருவூராரைக் கொன்று விடுவது என்று முடிவெடுத்து அவர்கள் ஒருநாள் கத்தி கம்புகளோடு புறப்பட்டுச் சென்றனர்.

இறைவன் சித்தம் அது என்பதை உணர்ந்த கருவூர்ச் சித்தர் பயந்தவர் போல் கோவிலை நோக்கி ஓடினார். ஆயினும் அந்த வேதியர் அவரைத் துரத்திச் சென்றனர்.

கருவூரார் ஓடிச் சென்று கோவிலில் உள்ள சிவலிங்கத்தைத் தழுவிக் கொள்ள இறைவன் அவ்வண்ணமே அவரைத் தம்முடன் ஐக்கியப்படுத்திக் கொண்டார்.

## திருமூலர்

**பிறப்பு :**

சித்தர்கள் சாதாரண மனிதர்கள் அல்ல. அழிந்து போகக்கூடிய உடலை என்றுமே அழியாத கற்பதேகமாக்கி காலம் கடந்து வாழக் கூடிய தன்மை பெற்றவர்கள்.

உடலுக்குத்தான் முதுமை மரணம் என்பவை எல்லாம் ஏற்படுமே தவிர ஆன்மாவுக்கு ஏற்பட முடியாது. ஒரு மனிதன் உயிரோடிருக்கும் காலத்தில் ஞானம் பெற்றுத் தன் உடலை உதறிவிட்ட பிறகு அதே ஞானத்தோடு வாழக்கூடிய தகுதி பெற்று விட்டால் அவன் யுக யுகங்களாக வாழ்ந்து கொண்டே இருக்கலாம்.

அந்த வகை சித்தர்களில் உயர்நிலையை அடைந்தவராகக் கருதப்படுவர் திருமூலர்.

திருமூலர் கைலாய பரம்பரையைச் சேர்ந்தவரென்றும் சிவபெருமானிடம் உபதேசம் பெற்றவராகவும் கூறப்படுகின்றார். சிதம்பரம் கனக சபையில் இறைவனின் திருநடனத்தைக் காணுகின்ற பேறு படைத்தவர் திருமூலர். கயிலாயத்தில் இருந்தபோது திருமூலர் நம்பிரான் சுந்தரர் எனும் பெயரில் அழைக்கப்பட்டதாக திருமந்திரம் உரைக்கின்றது.



**விசுவ பிரம்ம புராணம் :**

தமிழ் நாட்டு அரசு வெளியீடு தமிழ் வளர்ச்சி மையம் 1964 (வரிசை எண் 1569) செயலர் திரு. அ.ச.ஞானசம்பந்தன் எம்.ஏ., 1867 முதல் 1900 முடிய தமிழ் நூல்களின் அட்டவணை, 1569 முதல் 1892 முடிய ஒன்பது பெரியோர்கள் விசுவபிரம்ம புராணம் எழுதியுள்ளார்கள் என்ற பட்டியல் உள்ளது. இதில் பொன் நகை செய்யும் ஆசாரிகளைப் பற்றியும் புராண விளக்கத்துடன் கூடியதாக உள்ளது.

பிரம்மன் வழிவந்தவர்கள் ஆசாரிகள் என்று சொல்லும் வடமொழி நூல்களின் தமிழ் விளக்கத்துடன் உள்ளது காணலாம். இவற்றைக் கண்ட பிறகு இதன் விளக்கமும் தேவைப்படுகின்றது.

தியானத்தின் மூலம் பிரம்மத்தை உணர்ந்தவர் எவரும் பிராமணரே என்போம். இதில் ஜாதியோ, வகுப்போ, மதமோ கூட நுழைய இடமில்லை; பிரம்மத்தை உணர்ந்தவர் பிராமணன் என்று சொல்லிக்கொள்ள இடமுண்டு. விசுவ பிராமணர் என்போரிலும் பிரம்மத்தை உணர்ந்தவர் இருந்தனர். தாங்கள் மட்டுமே பிரம்மத்தை உணர்ந்தவர்கள் என்ற வகுப்பார்; மற்றவர்களை ஒப்பவில்லை மேலும் விசுவபிராமணர் என்போர் திராவிடர். இக்காரணமும் இவர்களை வேறுபடுத்த முடிந்தது. இதனால் இவர்கள் தங்களை விசுவபிராமணர் என்று சொல்லிக் கொள்ள நேர்ந்தது. பிரமம் என்பது ஒன்றே என்று தெரிந்திருந்தும் பிராமணர் என்றும், விசுவ பிராமணர் என்றும் சொல்லிக்கொள்வது இயல்பாக அமைந்தது என்று அமைதி கொள்வதே சாலப்பொருத்தம் என்போம்.

**மாமல்லபுரம் :**

தஞ்சைப் பெரிய கோயிலும் மாமல்லபுரமும் தமிழ் நாட்டின் தலைசிறந்த கலைப் படைப்புகளாகும். கட்டட அமைப்பிலும், சிற்ப அழகிலும், கல்வெட்டுகளின் நிலையிலும் மிகவும் சிறந்தவை மாமல்லபுரத்து சிற்பங்கள். இவை பல்லவ மன்னர்களின் பெருமிதப் படைப்புகளாகும். மாமல்லபுரம் தொண்டை மண்டலத்தின் தலை சிறந்த துறைமுகம்.

**மாமல்லபுரத்துச் சிற்பிகள் :**

இச்சிற்பிகளைப்பற்றி தெரிந்து கொள்வது கடினம். எனினும் கீழ்காணுமவற்றைக் கொண்டு, அச்சிற்பியர் யார் என்பதை ஊகிக்கலாம். மாமல்லபுரத்தை அடுத்த ஒரு கிராமம் பூஞ்சேரி. அக்கிராமத்தின் தென்புறச்சாலையருகில் சில பாறைகள் உள்ளன. அவற்றில் ஒன்று "நொண்டி வீரப்பன் குதிரைத் தொட்டி" எனப்படுவது. இப்பாறையின் நடுவில் குழிந்து தொட்டிபோல் இருப்பதால் அதற்கு அப்பெயர் அமைந்தது. நொண்டி வீரப்பன்

என்பான் தனது குதிரைக்கு இதில் தண்ணீர் காட்டியிருக்கலாம். எனவே அவன் பெயரால் அது விளங்குகின்றது. அதைப்பற்றி அப்பாறையின் கல் வெட்டிலும் உள்ளது. இங்கு காணும் கல்வெட்டில், கேவாத பெருந்தச்சன், குணமல்லன், பய்யமிழிப்பான், சாதமுக்கியன், கலியாணி, திருவொற்றியூர் அபாஜன், கொல்லன் சேமன் என்று ஏழு பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இவை பழைய பல்லவ கிரந்த தமிழ் எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ளன. கேவாத பெருந்தச்சன் என்பது ஒரு சிற்பியைக் குறிக்குமென்பது வெளிப்படை, குணமல்லன் என்ற பெயரும் சிறந்ததாகவுள்ளது.

இது சுமார் 1200 ஆண்டுகளுக்கு முன்பு அமைக்கப்பட்டது. இன்றும் நல்ல நிலையில் நிற்பதைக் காண்கின்றோம். இங்கு காணும் கல்வெட்டுக்களிலிருந்து பல்லவர் காலத்தில், ஆகம ரீதியில் ஆலயங்கள் கட்டப்பட்டுள்ளன என்பதை திட்டமாக அறிகின்றோம்.

கோயில் கட்டும் கலைஞர்களைத் தச்சர் என்று தமிழ் நாட்டில் அழைப்பது வழக்கம். இந்த கலைப் படைப்பை தலைமையேற்று நடத்தியவன் பரமேசுவர தச்சன் என்றும் அறிகின்றோம்.

## உத்தரமேரூர் கோயில் கட்டிய தச்சர்கள் :

காஞ்சிபுரத்திலிருந்து இருபது கல் தொலைவில் உத்தர மேரூரில் சுந்தர வரதராஜ பெருமாள் கோயில் உள்ளது. அது மிகப் பழமையானது. அங்கு பல்லவவேந்தன், நந்திவர்மன் தனது காலத்தில் சுந்தர வரதராஜ பெருமாளுக்குக் கோயில் கட்டியுள்ளான். அக்கோயிலில் உள்ள கல்வெட்டு, கோயிலினுடைய இலக்கணங்களை, அலங்கார முறைகளையும் அளவுகளையும் எவன் அறிகின்றானோ அவன் வாஸ்து வித்தைய (கோயில் கட்டும் கலையை) அறிந்தவர்களில் சிறந்தவன் ஆவன் என்று குறிப்பிட்டுள்ளது அக்கல்வெட்டு. மேலும், பாடக புரவாசியும் சிறந்த அறிவாளியும் சதா சத்ய சந்தனுமான ஸ்ரீ பரமேஸ்வர பெருந்தச்சன் என்பவனால் இந்த கிராமத்தில், வாஸ்துக்களிலெல்லாம் சூரியன் போன்ற இக்கோயிலானது வாஸ்துக்களில் கூறப்பட்டுள்ள பிரயோகங்களுக்கு ஒப்ப கட்டுப்பட்டு சாதியாலும் பெயராலும் சிறந்து விளங்குகின்றது என்றும் கூறுகின்றார். சுமார் 1200 ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்டது இது. இன்றும் நல்ல நிலையிலேயே நிற்கும் கோயிலாகும்.

இதேபோன்று திருவொற்றியூரில் ஆதிபுரீசுவரர் ஆலயத்தைக் கட்டிய சிற்பியின் பெயரும் கல்வெட்டில் கிடைக்கின்றது. இக்கோயிலை முதலாம் இராஜேந்திர சோழனின் சதுரரனான பண்டிதன் என்பவரின் விருப்பத்திற்கு இணங்க கருங்கல்லால் மூன்று தளங்களை உடையதாக பலவித கரணங்கள், கூடங்கள், கோஷ்டங்கள் முதலியவற்றுடன் இரவி என்னும் வீர சோழப்பெருந்தச்சன் கட்டினான் என்பதைக் காண்கின்றோம்.



## யஜுர் வேதம் மற்றும் ஸூத்திரங்களின் அறிமுகம் :

வேதங்களில் முக்கியமான கர்மமாகிய யஜ்ஞங்களை பற்றி விளக்கமாக கூறுவது யஜுர்வேதமாகும். யஜுர்வேதத்தின் முக்கிய பிரயேகங்களில் முதலிடம் பெறுவது அக்னியே ஆகும். அப்படிப்பட்ட அக்னியின் பிரதான தேவதையாக வேதத்தில் விஸ்வகர்மா கூறப்பட்டுள்ளார். மேலும் ரிஷிகள் பல ரிக்குகளை, யக்ஞங்களில் மந்திரங்களை பாடல்களாக தொகுத்ததால் யஜுஷ் என்ற செயல் பின் விளக்கமுற்று யஜுர் என்ற வேத பெயராயிற்று என்று ஆய்வாளர்கள் கூறுகின்றார்கள். யஜுர்வேதங்களின் விதிமுறைகளை ருஷிகள் காண்டங்களாகவும், அத்யாயமாகவும், ஸ்தானங்களாகவும், பிரச்சனங்களாகவும், ப்ராஹ்மாணங்களாகவும், பிரபாடகங் களாகவும், கண்டிகையாகவும், அனுவாகங்களாகவும் பிரித்து வைத்துள்ளார்கள். யஜுர் வேதமானது லிபி (எழுத்து) களில் பயன்பட தொடங்கிய காலம் முன் ஸ்ருதியாக ஒரே பாடமாக மட்டுமே இருந்துள்ளது. லிபிகள் பயன்படுத்தப்பட்ட காலத்திலிருந்து ரிஷிகள் இதை ஸாகை (பிரிவு) என்ற பெயரில் 101 ஸாகையாக செய்தார்கள்.

யஜுர்வேதத்தை ஆதியில் ஸ்ரீ விராட் விஸ்வகர்ம பரப்ர்ஹ்மாவிடம் உண்டான புத்திரர்களாகிய ஸனகாதி-ப்ரஹ்ம ருஷிகளுக்கும், மானஸ புத்திரர்களாகிய மரீசியாதி ரிஷிகளுக்கு போதித்தார். பின்னர் ரிஷிகளின் பிரவரத்தில் உண்டான வைஸம்பாயன முனிவர் (வியாஸ முனிவரின் சீடர்) காலத்தில் க்ருஷ்ணயஜுர் சுக்லயஜுர் என இரண்டாக பிரிக்கப்பட்டது. இதற்கு காரணம் ஒருமுறை வைஸம்பாயனார் தன்னுடைய குரு சொன்ன சில வேதக்கருத்துகளை தன்னுடைய வித்யா கர்வத்தினால் ஏற்கவில்லை எனவே குருவானவர் நான் கற்றுக்கொடுத்த வித்தையை உண்டதை கக்குவது போல் கக்கு என்றார். உடனே வைஸம்பாயனார் தான் கற்ற யஜுர்வேதத்தை பிண்டம் போல கக்கினார். அதை அறிந்த தேவர்கள் உடனே தைத்திரீய (மணிபுறா) வடிவங்கொண்டு அதை கொத்தி தின்றார்கள். குரு சொல்லிக்கொடுத்த பழமையான முதன்மையான முதல் பாடத்தை க்ருஷ்ண யஜுர்வேதம் (86 ஸாகைகள்) அல்லது தைத்திரீய ஸம்ஹிதை என்று அழைக்கப்பட்டது. பின்னர் வைஸம்பாயன முனிவர் ஸில்பகாஸ்யப ரிஷியின் மகனும் த்வஷ்டா-பிரஜாபதியின் மருமகனுமான ஸ்ரீ ஸூர்யநாராயண பகவானின் அருட்கடாக்ஷத்தினால் துய்மையான புதுமையான சுக்ல யஜுர்வேதத்தை கற்றார். இவர் கற்ற சுக்ல யஜுர்வேத (15 ஸாகைகள்) பெருமையை கேள்விப்பட்டு தேவர்கள் வாஜஸநேயர்களாக (குதிரை முகங்கொண்டு) வந்து கற்றதினால் வாஜஸநேயிந ஸம்ஹிதை என்று அழைக்கப்பட்டது.

